REGD. No. M. 6311 ★ தனி இதழ் 1 அணா ★ இலங்கையில் 10 சதம் ★ 'PHONE : 55630

# நம் நாடு

தி.மு.க.தின இதழ் ஆசிரியர்..அண்ணாதுரை

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

மலர் 2] சென்னை: தை 20உ புதன் (2—2—55) ★ ★ வெளியூர் : தை 21உ வியாழன் (3—2—55) [இதழ் 198

## எம். என். ராய்க்கு ஞாபகார்த்தம்

### நான்கு நகரங்களில் அமைக்கப்படும்

பம்பாய், கல்கத்தா, ஐதராபாத் ஆகிய நகரங்களிலும், ராஜஸ்தானில் ஒரு நகரிலும், காலஞ்சென்ற எம். என். ராயின் நினைவாக மண்டபங்கள் கட்டுவது என்று அகில இந்திய மனிதாபிமான கட்சி முடிவு செய்திருக்கிறது.

இந்த மண்டபங்கள், 'ராய் மண்டபங்கள்' என்று அழைக்கப்படுமாம்.

# 1953 தி. மு. கழக அறப்போரின் எதிரொலி

## வ. ஆ. மாவட்ட நீதித் துறையின் ஆமைவேகம்!

## 37 வாய்தாக்கள்-இன்னும் முடிவு கிடைக்கவில்லை!

## வழக்குத் தொடர்ந்தோ ஒன்றரை ஆண்டாகிறது!

வாலாஜா கோர்ட்டில் நீண்ட நாட்களாக முடிவு காணாது பல தடவை 37 வாய்தாக்கள் போடப்பட்டு இதுவரை எத்தகைய தீர்ப்பும் கூறாமல் இருந்து வருகிறது.

1953 ஜுலை 14-ல் நடைபெற்ற இரயில் நிறுத்தக் கிளர்ச்சியில் ஈடுபட்ட 33 தோழர்கள் சம்பந்தப்பட்ட மேற்படி வழக்கு பற்றி 1—1—55 செவ்வாய்க் கிழமை பகல் 1 மணிக்கு தி. மு. கழக பொதுக் குழு உறுப்பினர் தோழர்கள் வே. அ. இளஞ்செழியன், கருத்தோவியன் ஆகியோர் வ. ஆ. மாவட்ட கலெக்டர் அவர்களைச் சந்தித்து நிலைமையைக் கூறினார்கள்.

கலெக்டர், உடனடியாக டி.எஸ்.பி. அவர்களையும், வாலாஜா மாஜிஸ்திரேட் அவர்களையும் இது சம்பந்தமாகக் கேட்டு விரைவில் முடிவுகாண ஏற்பாடு செய்வதாகக் கூறினர்.

தோழர்கள் வி. எஸ் மனி, ஆ. மணிஎழிலன் ஆகியோரும் உடன் சென்றிருந்தனர். (ந. நி.)

**************************************

## பொதுக் குழுக் கூட்டம்

★

திராவிட முன்னேற்றக் கழகப் பொதுக் குழுக் கூட்டம் பிப்ரவரி 19, 20-ந் தேதி (சனி, ஞாயிறு) களில், கோவை மாவட்டம் பேரூரில் நடைபெறும்.

ஆராயப்படும் பொருள், கூட்டம் நடைபெறும் இடம் பின்னர் அறிவிக்கப்படும்.

**************************************

## திரு—தமிழர் தலைவர்கள் ஜாமீனில் விடுதலை!

### பட்டம் ஆட்சிக்கு மீண்டும் மண்டையடி!

பெங்களூர், பிப். 1—

திரு-தமிழக இணைப்புப் போராட்டத்தையொட்டி, தற்போது சிறை வைக்கப்பட்டுள்ள தி. த. நா. கா.-வைச் சேர்ந்த 7 சட்டசபை உறுப்பினர்களையும் இடைக்கால ஜாமீனில் விடுவிக்க மைசூர் உயர்நீதி மன்றம் உத்திரவிட்டுள்ளது.

இந்த 7 எம். எல். ஏ-க்கள் மீதுள்ள வழக்குகளும், இந்திய தலைமை உயர் நீதிமன்றம் தந்த உத்திரவின் பேரில், தி. கொ. உயர் நீதிமன்றத்திலிருந்து மைசூர் உயர் நீதிமன்றத்திற்கு மாற்றம் செய்யப்பட்டது.

ஜாமீன் மனுக்களை மைசூர் உயர் நீதிமன்ற தலைமை நீதிபதி மேடப்பாவும், நீதிபதி பத்மனுபய்யாவும் விசாரணை செய்து, ரூ. 2,000 சொந்த ஜாமீனிலும், அதே தொகைக்கு நபர் ஜாமீன் மீதும் அந்த ஏழு பேரையும் விடுதலை செய்யும்படி உத்திரவிட்டிருக்கின்றனர்.

தோழர்கள் குஞ்சன் நாடார், தாணுலிங்க நாடார், எம். வில்லியம், எம். டி. அனந்தராமன், நூர் முகமது, டி. டி. டேனியல், அலெக்சாண்டர் சைமன் ஆகிய 7 பேரும்தான் மேற்குறிப்பிட்ட சட்டசபை உறுப்பினர்களாவர்.

தற்போது நடைபெற்று வரும் தி. கொ. சட்டசபைக் கூட்டத்தில் அவர்கள் கலந்துகொள்ளும்படி அவர்களை ஜாமீனில் விடுவிக்க வேண்டும் என்று பெங்களூர் வழக்கறிஞர் இ. வி. மாத்யூ கொடுத்த ஜாமீன் மனுவில். தி. கொ. சர்க்கார், எதிர்க்கட்சி சட்டசபை உறுப்பினர்களை சிறையில் அடைத்துவைத்து, தனது பதவி பறிபோகாமலிருக்கச் செய்கிறது என்றும், மனுதார்களில் சிலர் 6 மாத காலமாகவும், சிலர் குறைந்த பட்சம் 1½ மாதகாலமாகவும் சிறை வைக்கப்பட்டு உடல் நலிவுற்றிருக்கின்றனர் என்றும் குறிப்பிட்டு, அவர்கள் யாருமே, ஜாமீனில் விடக்கூடாத குற்றங்கள் எதுவும் செய்துகொண்டதில்லை என்றும் காணப்பட்டிருக்கிறது.

மனுதாரர்கள் சார்பில் விவாதித்த அவர் மேலும் குறிப்பிட்டார் :—

"100-க்கு மேற்பட்ட உறுப்பினர்களடங்கிய சட்டசபையில், 16 உறுப்பினர்களே கொண்ட பி. சோ. கட்சி, மந்திரி சபை அமைத்து பதவியில் இருந்துவருவது எந்த ஒரு ஜனநாயகத்துக்கும் உடன்பட்டதல்ல; தாங்கள் கொண்டுள்ள பயத்தின் காரணமாக மேற்குறிப்பிட்ட உறுப்பினர்களை சிறையில் அடைத்ததோடு, அவர்களை விடுதலை செய்தால், எங்கே அவர்கள் நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வந்து நிறைவேற்றி, மந்திரி சபையை வீழ்த்துவார்களோ என்ற பயமும் தி. கொ. சர்க்காருக்கு உள்ளது," என்று குறிப்பிட்டார்.

விவாதங்களுக்குப் பின்னர், அந்த 7 பேரையும் ஜாமீனில் விடுவிப்பது என்றும், முதல் எதிரியான குஞ்சன் நாடார் மீது மட்டும் இரண்டு வழக்குகள் இருப்பதால் அதிக 'செக்யூரிட்டி'களை அவர் காண்பித்து ஜாமீனில் விடுவித்துக் கொள்ளலாம் என்றும் நீதிபதி தீர்ப்புக் கூறினர்.

## மக்கள் சபை உறுப்பினருக்கு சிறைவாசம்!

இம்பால், பிப். 1—

மக்கள் சபை உறுப்பினரான ரிஷாங் கெயிஷிங் என்பவருக்கும், மற்றொரு மலைவாசிகள் தலைவனுக்கும் தலா இரண்டு மாத சிறை தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது.

சென்ற ஆண்டு டிசம்பர் திங்களில் இங்கு நடைபெற்ற சத்தியாக்கிரகம் இயக்கம் சம்பந்தமாக இவர்கள் கைது செய்யப்பட்டிருந்தனர்.

## நெருக்கடிகள் நீங்க!

உலகில் நிலவிவரும் நெருக்கடிகள் பலவற்றைக் குறைக்க கட்சி வேறுபாடுகள் இல்லாத முறையில் ஆசிய நாடுகளின் மாநாடு ஒன்று, வருகிற ஏப்ரல் திங்களில் நடைபெற வேண்டியதற்கான ஏற்பாடுகளையெல்லாம் பூர்த்தி செய்ய, ஆசிய நாடுகளின் பிரதிநிதிகள் அடங்கிய கூட்டமொன்று இத்திங்கள் 5-ந் தேதியன்று புதுடில்லியில் நடைபெறவிருக்கிறது.

## சீனாவை ஆஸ்திரேலியா அங்கீகரிக்கும் ?

சீன மக்களின் உண்மையான பிரதிநிதியான பீகிங் சர்க்காரை ஆஸ்திரேலியா ஆதரிக்க வேண்டுமென்று, இப்போது நடைபெறும் காமன்வெல்த் முதலமைச்சர்கள் மாநாட்டில் ஆஸ்திரேலியாவிடம் கூறப்படும் என்று தெரிகிறது.

சீனாவை ஐ. நா. சபையில் சேர்த்துக்கொள்ளும் முயற்சியில் தீவிரமாக பிரிட்டன் ஈடுபடுமுன்னர், ஆஸ்திரேலியாகம்யூனிஸ்டுசீனாவை அங்கீகரிப்பது காமன்வெல்த் நாடுகளுக்கிடையே சீனா பற்றி நிலவும் நெருக்கடியான நிலைகளைத் தவிர்க்கப் பயன் படும் என்று கருதப்படுகிறதாம்.

வைடமின் 'டி' எனும் சத்துப் பொருளைக் கண்டுபிடித்த பிரிட்டிஷ்-போஷாக்கு நிபுணரான சர். எட்வர்டு மெலன்பை என்பவர், தமது 70-வது வயதில் திடீரென காலமானார்.

## புதியதோர் பட்டினிப் போர்

### பத்தாயிரம் தொழிலாளர் கையாளும் முறை

கோரக்பூரிலுள்ள இரயில்வே பட்டறைகளில் வேலை செய்யும் சுமார் 10,000 ஊழியர்கள், நிர்வாகிகளுக்கு எதிராகத் தங்கள் ஆட்சேபத்தைக் காட்டிக்கொள்வதில் புதியதோர் முறையைக் கையாண்டு வருகின்றனராம் ;— அதாவது, ஒவ்வொரு நாளும் ஒரு வேளை சாப்பிடாமல் பட்டினி கிடந்து வருகின்றனராம்.

சென்ற ஜனவரி திங்கள் 15-ந் தேதியிலிருந்து, மேற்படி இரயில்வே நிலையத்தில், 'வாகன்' தயாரிக்கும் பகுதியிலுள்ள சுமார் 250 தொழிலாளர்கள் முதன் முதலாக இந்த 'ஒரு நேர பட்டினி' முறையை ஆரம்பித்து விட்டிருக்கின்றனர்.

## பாட்டிமார் கல்வி முறையே குழந்தைகளுக்கேற்றதாம்!

### குலக்கல்வி திட்டத்தின் குருதேவர் ஆச்சாரியார் கூறுகிறார்

"இப்போது நம் நாட்டில் அமுலில் உள்ள கல்வி முறை மாணவர்களின் இளமைக் காலத்திலேயே அவர்களின் உள்ளத்தில் பொருமையையும், சுயநலப் போட்டி மனப்பான்மையையும் ஏற்படுத்துகிறது. சமூக ஒத்துழைப்பு பற்றிய உணர்ச்சியை, இப்போதைய கல்வி முறை மாணவர்களிடையே ஏற்படுத்துவது கிடையாது; அதற்கு மாறாக, தனித் தன்மையை அதிகரிக்குமாறு செய்கிறது."

இவ்வாறு, சென்னையின் முன்னாள் முதலமைச்சர் இராசகோபாலாச்சாரியார், இந்தூரில் நடைபெற்ற அகில இந்திய கல்வி மாநாட்டிற்கு அனுப்பிய செய்தியில் குறிப்பிட்டிருக்கிறார்.

'குழந்தைகளுக்கு, இளம் வயதில் மற்றவர்களிடையே தொடர்பு ஏற்பட வேண்டுமென்பது நல்லதுதான்; ஆனால், அவர்களை குடி உரிமைக்கும், சமூக ஒத்துழைப்புக்கும் தயார் செய்யாத எந்த முறையும் நல்லதல்ல," என்று அவர் மேலும் கூறுகிறார்.

"இளம் சிறார்களுக்கு நமது விவசாயக் குடும்பங்களில் காணப்படும் பழைய கால பெண் கல்வி முறைதான் சிறந்ததாகும்"

என்று ஆச்சாரியார் குறிப்பிடுகிறார்.

"மாண்டிசோரி கல்வித் திட்டம் என்பது குழந்தைகளின் கல்வி மகிழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டு இருக்கவேண்டுமென்ற உண்மையினைக் கொண்டதாகும்; உழைப்பின் அடிப்படையில் கல்வித் திட்டம் அமையவேண்டுமென்று வார்தா திட்டம் கூறுகிறது; ஆகவே, மாண்டிசோரி முறையையும், வார்தா திட்டத்தில் உள்ள கொள்கையையும் சேர்த்து குழந்தைகளுக்கான கல்வித் திட்டத்தை அமைக்க வேண்டும்"

என்று, ஆச்சாரியார் தனது செய்தியில் மேலும் குறிப்பிடுகிறார்.

"இந்த முறையில்தான் நமது பழங்காலப் பாட்டிமார்கள் தங்கள் பெண்களை வளர்த்தார்கள்,"

என்றும், ஆச்சாரியார் கூறியிருக்கிறார்.

"வீட்டிலிருந்து குழந்தைகளை அடியோடு பிரித்து வைக்கும் கல்வியின்மீது எனக்கு நம்பிக்கையில்லை; இந்தக் கல்வியைத்தான் முன்னேற்றக் கருத்துள்ள கல்வியாளர்கள் போதிக்கின்றனர்."

என்று, அவர் மேலும் கூறுகிறார்.

## அறிவுக் கூடமாகிறது அரண்மனை!

மயூர்பஞ்சிலுள்ள முன்னாள் அரச குடும்பத்தவருக்குச் சொந்தமான அரண்மனை ஒன்றை, கல்லூரிக் கட்டிடமாக உபயோகிக்க முடிவு செய்து, ஒரிசா சர்க்கார் விலை கொடுத்து வாங்க இருக்கிறார்களாம்.

நம் நாடு
தி.மு.க. தின இதழ் — ஆசிரியர்: அண்ணாதுரை
சென்னை 2—2—1955 புதன்

# அரசியல் அவலட்சணங்கள்!

(II)

சென்ற, நான்கு தினங்களுக்குமுன், திரு-கொச்சி அரசியலில் முக்கிய பங்கேற்றுள்ள தி. கொ. காங்கிரஸ் கட்சியும், தி.கொ.த.நா. காங்கிரஸ் கட்சியும், தி. கொ. தமிழ்ப் பகுதி மற்ற தமிழ் நாட்டுடன் இணைய வேண்டுமென்ற அங்குள்ள தமிழர்களின் கோரிக்கைக்கு எந்த அளவு மதிப்பளித்து நடக்கின்றன என்பதை விளக்கமாகக் குறிப்பிட்டிருந்தோம். அதே கட்டுரையில், அகில இந்தியக் காங்கிரசின் வாக்குறுதியை மீறி நடந்துகொள்ளும் வக்கிர புத்தியையும் சுட்டிக் காட்டியிருந்தோம்.

மொழிவழி அடிப்படையில் தி. கொ. தமிழ்ப் பகுதி, சென்னை தமிழ்ப் பகுதியுடன் இணைவதைத் தடுத்து நிற்கிறது தி. கொ. காங்கிரஸ். அது, தன்னிச்சையாகவும் இந்தத் தடுப்பு வேலையை மேற்கொண்டு வரவில்லை; அகில இந்தியக் காங்கிரசின் வெளிப்படையான தூண்டுதலே அதன் பிடிவாதத்திற்குக் காரணம் என்பதையும் முன்னர் குறிப்பிட்டிருந்தோம்.

தி. கொ. தமிழ்ப் பகுதிகள் சென்னை தாய்த் தமிழகத்துடன் இணையும் கோரிக்கையானது, அந்த நேரத்தில் இருந்துவந்த காங்கிரஸ் அமைச்சர் குழுவையும் குடை கவிழச் செய்து, அதை வெற்றியுறச் செய்வதாக வாக்களித்த தி. கொ. த. நா. காங்கிரஸ் கட்சியினருக்கே பெருவாரியாக வாக்களிக்கும்படி தமிழ் மக்களைத் தூண்டியும் இருக்கிறது. அக்கோரிக்கையை உடும்புப் பிடியாகப் பற்றிக் கொண்டிருப்பதாக நடித்த காரணத்தினால்தான் தி. கொ. த. நா. காங்கிரசை, அங்குள்ள தமிழ் மக்கள் உற்சாகமாக ஆதரித்தனர். ஆனால், தி. கொ. தமிழர்களின் மூல கோரிக்கையை அலட்சியப்படுத்தி விட்டு, தேர்தல் காலத்தில் கொடுத்த வாக்குறுதியை மீறி, அகில இந்திய காங்கிரசுடனும், அதன் உறுப்பான தி. கொ. காங்கிரசுடனும் கள்ள நட்பு கொள்வதையே தங்கள் அரும் பணியாகக் கொண்டு, தி. கொ. த. நா. காங்கிரஸ் சட்டசபை உறுப்பினர்கள் நடந்துவருகிறார்களோ எனக் கருதுமாறு, அவர்கள் நடவடிக்கை இருந்து வருகிறது என்றும், அவர்களை நம்பிக் கிடப்பதால் தி. கொ. தமிழ் மக்களுக்கு தங்கள் கோரிக்கையில் வெற்றி கிட்டாது என்றும், எனவே வெற்றிக்கான வேறு வழியைத் தேட வேண்டுமென்றும், அதற்கான முதற்படியாக தி. கொ. த. நா. காங்கிரஸ் தலைவர்களின் அதிகார அரசியல் அவலட்சணத் தன்மையை அங்குள்ள தமிழ் மக்கள் அறிந்துகொள்ள வேண்டியது அவசியத்திலும் அவசியமென்றும், இதற்குமுன் விளக்கமாக எழுதி இருந்தோம்.

திரு-கொச்சி அரசாங்கத்தை ஏற்று நடத்துவதற்கு எந்த ஒரு தனி அரசியல் கட்சிக்கும் தேவைப்படும் எண்ணிக்கை பலம் ஏற்படாத அளவில் சென்ற தேர்தல் முடிவு இருந்து விட்டது. தேர்தல் நேரத்தில் தி. கொ. காங்கிரசை எதிர்க்க அடிப்படை இல்லாது, வெறும் அரசியல் சந்தர்ப்பக் கூட்டாக இணைந்த 'முற்போக்கு'க் கட்சிகளும், பதவி மணியோசை கேட்டதும், நெல்லிக்காய் மூட்டை போல் சிதறிவிட்டன. தங்கள் அமைச்சர் குழுவைக்கவிழ்த்து, காலம் வருவதற்குமுன் ஒரு புதிய தேர்தலுக்கு வழி செய்த தி.கொ.த.நா. காங்கிரசுடன் கூட்டாகச் சேர்ந்து மீண்டும் அரசாங்கத்தை அமைப்பதா என்ற அகந்தையால், மற்ற கட்சிகளைவிட அதிக உறுப்பினர்களைக் கொண்டிருந்த தி. கொ.காங்கிரஸ், அரசாங்கத்தை அமைப்பதற்கு முன்வரவில்லை. அதே நேரத்தில், அதிகார அரசியல் தனது பிடியிலிருந்து வேறு கைக்குமாறிவிடுவதையும் தி. கொ. காங்கிரஸ் விரும்பவில்லை.

தி. கொ. த. நா. காங்கிரஸ் உறுப்பினர்களை உடன் சேர்த்துக்கொண்டு, இன்னும் இரண்டொரு சட்டசபை 'மாணிக்கங்களை' வலைபோட்டு இழுத்து, அமைச்சர் குழுவை அமைப்பதற்கு தி. கொ. காங்கிரசிற்கு வாய்ப்பு இருக்கத்தான் இருந்தது.

ஆனால், அந்த வாய்ப்பை செயலாற்ற முனைவதானால், தி. கொ. தமிழ்ப் பகுதி சென்னை தாய்த் தமிழகத்துடன் இணைய வேண்டும் என்ற கோரிக்கையை தி. கொ. காங்கிரஸ் ஒப்புக்கொண்டாக வேண்டும்; ஒப்புக்கொள்வதுடன் நின்றுவிடாமல், அது வெற்றி பெறுவதற்கான முயற்சிகளையும் உடனடியாக மேற்கொள்ள வேண்டும். அவ்விரண்டும் தி. கொ. காங்கிரசிற்கு வேம்பும்—எட்டியும் ஆயிற்றே! எனவே, தி. கொ. த. நா. காங்கிரசின் ஒத்துழைப்பினால் அதிகாரத்தைக் கைப்பற்ற, எட்டியும், வேம்பையும் உண்ணும் விலையைக் கொடுக்க தி. கொ. காங்கிரஸ் மனம் கொள்ளவில்லை.

மேற்கூறிய வழியில் செல்ல ஒருப்படாத போதிலும், அதிகார பீடத்தில் தம் ஏவல்படி ஆடிக் கிடக்கும் ஒரு கட்சியை எப்படியாவது அமர்த்தி ஆக வேண்டும் என்ற அதிகார அரசியல் வெறிக்குணம் மட்டும் தி. கொ. காங்கிரசைவிட்டு நீங்கினபாடில்லை. தேர்தலில் காங்கிரஸ் கட்சியை எதிர்த்து, கொள்கை முரண்பாடு கொண்டு இயங்கும் அல்லது தெளிவற்ற கொள்கைகளையும் நடைமுறைகளையும் கொண்டு போட்டியிட்ட இடதுசாரி முன்னணியில் கீறல் விழத் தொடங்கியது. இடதுசாரி முன்னணியின் தலைமை தன்னைப் பதவியில் உயர்த்த ஏணியாக உதவாது என திட்டவட்டமாகத் தெரிந்து கொண்டதும், முன்னணியை உதைத்துத் தள்ளிவிட்டு, தி. கொ. காங்கிரஸ் கட்சியுடன் அரசியல் அதிகார பேரத்தைத் தொடங்கினர், அந்த நேரத்தில் இடதுசாரி முன்னணியின் தலைவராக இருந்த பட்டம் தாணு பிள்ளை. எதிர்பார்த்த எடுபிடி தனக்குக் கிடைத்து விட்டது எனக் கண்ட தி. கொ. காங்கிரஸ் கட்சி, பட்டம் சேர்ந்துள்ள ம. சோ. கட்சிக்கு மகுடாபிஷேகம் நடத்திவைத்தது. பட்டத்தின் அதிகார அரசியல் பேரமும் வெற்றி பெற்றது. அதன் உடனடி பலனாக, பட்டம் முதலமைச்சர் ஆக்கப்பட்டார்!

மக்கள் பெயரால் நடைபெறுகிற 'மாட்சிமை பொருந்திய குடியரசுத் தலைவர் இராசேந்திர பிரசாத் அவர்களின் திரு - கொச்சி அரசாங்கம்' பட்டம் தாணுப்பிள்ளை அவர்களை முதலமைச்சராகக் கொண்டு, அன்று முதல் பேயாட்டம் ஆட ஆரம்பித்தது. தி. கொ. மக்களால் தேர்தலில் முடமாக்கப்பட்ட மக்கள் சோஷலிஸ்டு கட்சி, காங்கிரஸ் கொடுத்த ஆதரவெனும் பொய்க் காலின் துணையால், நிராயுதபாணியான திரு—கொச்சி தமிழ் மக்கள்மீது போர் தொடுக்கக் கிளம்பியது. போரும் தொடுத்துவிட்டது. அறப் போர்க்களத்தில் தமிழர்கள் உடலிலிருந்து பீரிட்டு அடித்த செங்குருதியால் பட்டத்தின் கரங்களும் கறை படிந்து இருக்கின்றன — அவருக்குப் பொய்க்கால் கொடுத்த காங்கிரஸ் பனம்பள்ளியின் கரங்களும் கறை படிந்திருக்கின்றன!

பட்டத்தை சிம்மாசனத்தில் அமர்த்துவதில், திரு—கொ. காங்கிரஸ் கணித்தது 'தப்புக் கணக்கு' என்பதை, காலம் விளக்கமாகக் காட்டிவிட்டது.

தான் இரவல் கொடுத்திருந்த பொய்க்காலை என்றாவது ஒரு நாளைக்குத் திரும்பிப் பிடுங்கிக் கொள்ள வேண்டும் என்ற எண்ணம் தி. கொ. காங்கிரசிற்கு எப்பொழுதும் உண்டு. அதிகார அரசியலின் இயல்பே அதுதான்.

அதிகாரம் இல்லாது, தனது ஆதரவுடன் மற்றொரு சிறுபான்மை கட்சி அரசோச்சுவதும், அதுவும் தான் துவக்கத்தில் கருதினதற்கு மாறாக தன் ஏவல்படி ஆட மறுத்து எதேச்சாதிகாரமாக அக்கட்சி கூட்டம் போட்டு வருவதும், திரு-கொ. காங்கிரசிற்கு அறவே பிடிக்கவில்லை. எனவே, பட்டத்திற்குத் தான் காட்டிவந்த ஆதரவை மீட்டுக் கொள்வது என அது வெளிப்படையாகக் கூறிவிட்டது.

"எரிகிற கொள்ளியை இழுத்துவிட்டால் உலையின் கொதிப்புத் தணிந்துவிடும். இரவலாகக் கொடுத்திருந்த பொய்க்காலைப் பிடுங்கிவிட்டால், பிறவி முடவன் திண்டாடுவான் என்ற நினைப்பில், தி. கொ. காங்கிரஸ், ம. சோ. கட்சிக்குத் தான் காட்டிவந்த ஆதரவை மீட்டுக்கொண்டது!

தி. கொ. காங்கிரஸ் எதிர்பார்த்தபடி, நடைமுறை உண்மை நிகழவில்லை. தி. கொ. காங்கிரசின் எண்ணத்தில் கொள்ளிவைப்பதுபோல் சம்பவம் உருவெடுத்துவிட்டது.

"திரு-கொ. காங்கிரசை எங்களால் மிஞ்ச முடியும். 'அதிகார அரசியல்' நடைமுறைகளில் எங்களைத் தோற்கடிப்பவர் யார்? என்பது காங்கிரஸ் கட்சியாரும் அறிந்ததுதான். அத்துறையில் எங்களுக்கு இணை யாருமிலர். காங்கிரஸ் கெடுபிடிக்கையால் சுட்டெரிக்கிறோம். அதே நேரத்தில் எங்கள் கட்சிக்கான இரண்டொரு சலுகைகளையும் பெற்றுக்கொள்ளுகிறோம். அவைகளை எல்லாம் 'பொதுமக்கள் பேரில்' என உரத்துக் கூறி விடுகிறோம். இதோ பாரும்! எங்கள் தோள்களில் ஏறி இடைக்காலத்திற்காவது சவாரி செய்யும்! பட்டம் தாணு அவர்களே!" எனத் திரைமறைவில் பேரம்பேசி பட்டத்தின் ம.சோ.கட்சி ஆட்சிக்கு சிறு தோராக உதவ தி. கொ. இடதுசாரி முன்னணி, தற்கால 'அதிகார அரசியல்' நடவடிக்கையாகக் கொண்டுவிட்டிருக்கிறது. இடதுசாரி முன்னணி என்பது, தி. கொ. கம்யூனிஸ்டு-கட்சியின் கைப்பாவையாகும்! புரட்சிகர சோஷலிஸ்டு கட்சியும், அந்தத் தேரின் அச்சாணியாக இருக்கிறது.

இப்பிரம்மிக்கத் தகுந்த தோல்வியைக் கண்டு, தி. கொ. காங்கிரஸ், கண்ணீர் சிந்திய வண்ணம் தரையை நோக்கித் தலை கவிழ்ந்து கிடக்கிறது. 'அதிர்ச்சி மருத்துவ' பண்டிதருக்குப் பிறகு கிளம்பி இருக்கிற யு. என். தேபர்தான், புனிதமான 'ஆத்மார்த்த அரசியல்' வேதாந்தத்தைக் கொண்டு திரு-கொ. காங்கிரஸ் தலைவர்களுக்கு ஆறுதல் கூறவேண்டும்.

திரு — கொச்சி அரசியல், 'அதிகார அரசியல் அவலட்சணங்கள்' குடியேறியுள்ள பாழடைந்த கோட்டையாக காட்சி தருகிறது. அதை மாற்றி அமைத்து மக்களாட்சி முறைக்கு வித்திட வேண்டிய பொறுப்பு அங்குள்ள மக்களையே சார்ந்ததாகும். அப்பொழுதுதான் மக்களாட்சி முறை, 'அதிகார அரசியல்' அடங்காப்பிடாரிகளிடமிருந்து மீட்சியுற்று, பொதுமக்களின் நலன்களைத் தேடித்தரும் வன்மை மிக்கதோர் புனிதச் சாதனமாக புது உருவம் பெறும்.

# "அதிகாரத்தை சொந்தக் கட்சியின் நலனுக்குப் பயன்படுத்துகிறார்!"

## "தன் 'சாவை'த் தடுக்க பிறரை திருப்திபடுத்தும் சாகசம் புரிகிறார்!"

## "கம்யூனிஸ்டு கைதிகளை விடுதலை செய்தது ஏன்?"

### திரு-கொச்சி சட்டசபையில் காங்கிரஸ் தலைவர் பனம்பள்ளி பேச்சு

திருவனந்தபுரம், ஜன. 31—

"ம. சோ. கட்சி மந்திரி சபையினர், அரசாங்க நிர்வாக இயந்திரத்தை கட்சி நலன்களுக்கும், மிகமிக நிலையற்ற ஒரு மந்திரி சபைக்கு உறுதியான நிலையைத் தேடவும் பயன்படுத்துகின்றனர்; மேலும், சபையில் உள்ள மிகச் சிறிய சிறுபான்மை அங்கத்தினர்களின் ஆதரவை மட்டுமே மந்திரிசபை பெற்றுள்ளது. இதனால், அவர்களால், நாட்டிற்கு நல்லதொரு உறுதியான நிர்வாகத்தினைத் தரமுடியவில்லை."

"கடந்த 1954 மார்ச்சு மாதத்தில், இராஜப்பிரமுகர் இந்தச் சபையில் உரையாற்றுகையில் தந்த பல வாக்குறுதிகளில் பெரும் பாலானவை இந்த மந்திரிசபையால் நிறைவேற்றப்படவில்லை; மேலும் சர்க்கார், ஐந்தாண்டுத் திட்டம், தொழில் மயமாக்குதல், அபிவிருத்தில் ஆகியவற்றில் போதுமான கவனம் செலுத்தவில்லை; இது கண்டு சபை வருந்துகிறது,"

—என்பன போன்ற வாசகங்களடங்கிய திருத்தம் ஒன்றை, திரு-கொச்சி இராஜப்பிரமுகருக்கு நன்றி தெரிவிக்கும் தீர்மானத்திற்குத் திருத்தமாக, சட்டசபை காங்கிரஸ் கட்சித் தலைவர் பனம்பள்ளி கோவிந்த மேனன் கொண்டு வந்தார்.

மேலும், இடதுசாரி ஐக்கிய முன்னணித் தலைவர் டி. வி. தாமஸ், புரட்சிகர சோஷலிஸ்டு தலைவர் டி. கே. திவாகரன் ஆகியோரும் இரு திருத்தங்களைக் கொண்டு வந்தனர்.

பின்னர், எல்லா திருத்தங்களும், திருப்பப் பெறப்பட்டன அல்லது சபையால் நிராகரிக்கப்பட்டன.

விவாதத்திற்கு முதன் மந்திரி பட்டம் தாணு பிள்ளை பதிலளித்திருக்கிறார்.

இறுதியாக ராஜப்பிரமுகருக்கு அவரது உரைக்காக நன்றி தெரிவிக்கும் தீர்மானம் நிறைவேறியிருக்கிறது.

காங்கிரஸ் கட்சி சார்பில் பேசிய பனம்பள்ளி கோவிந்த மேனன், "ராஜப்பிரமுகரின் உரையில், மாநிலத்தில் இப்போது நிலவும் அரசியல் நிலை குறித்தும், மந்திரி சபையின் எதிர்காலம் பற்றியும் எவ்விதக் குறிப்பும் இல்லாதது வருந்தத்தக்கதாகும்," என்று குறிப்பிட்டிருக்கிறார்.

ஐந்தாண்டுத் திட்டம் போன்றவற்றில் சர்க்காரின் போக்கினைக் கண்டித்து விட்டு தொடர்ந்து பேசிய அவர், கடந்த ஆண்டில் ம. சோ. கட்சியினர், எப்படி பதவிக்கு வந்தனர் என்ற விபரங்களைக் கூறினார்.

தொடர்ந்து அவர் கூறியதாவது:—

"கடந்த மாதம் முதல், காங்கிரஸ், பட்டம் தாணுவின் மந்திரி சபைக்குத் தந்துவந்த ஆதரவை நிறுத்திவிட்டது; அதனால், இப்போது மந்திரி சபை, சபையில் மிகக் குறைந்த சிறுபான்மையினரின் ஆதரவுடன்தான் இயங்குகிறது.

"காங்கிரஸ் தந்துவந்த ஆதரவை நிறுத்திவிட்ட பிறகும், ம. சோ. கட்சியினர் ஆட்சியில் தொடர்ந்து இருப்பது, அவர்கள், தங்கள் கட்சியினர் எப்படியாவது பதவியில் ஒட்டிக் கொண்டிருக்க வேண்டுமென்று

(4-ம் பக்கம் பார்க்க)



# மக்கள் சபை உறுப்பினரில் சிறந்தவருக்குப் பரிசு

## டி. வி. பாட்டார் கூறும் யோசனை

பொறுப்பை உணர்த்த அதுவே வழியாகுமாம்!

புனா, ஜன. 31—

"மக்கள் சபை உறுப்பினர்களில் மிகச் சிறந்தவருக்கு பரிசு வழங்குவதற்கான ஏற்பாடு ஒன்றை குடியரசுத் தலைவர் செய்ய வேண்டும்,"

என்ற ஒரு யோசனையை மகாமகோபாத்தியாய டி. வி. பாட்டார் வெளியிட்டிருக்கிறார்.

திரு. என். வி. காட்கில், மராத்தியில் எழுதியுள்ள 'நிர்வாக விவகாரங்கள்' என்ற புத்தகத்தின் வெளியீட்டு விழாவில் பேசிய அவர், தாம் குடியரசுத் தலைவராயிருந்தால் அப்படித்தான் செய்வார் என்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

"வேறு பல துறைகளில் பாண்டித்தியம் பெறுவோருக்கு பரிசு வழங்கப்படுவதைப் போலவே சிறந்த மக்கள் சபை உறுப்பினர்களாயிருப்போருக்கும், அது போன்ற பரிசு தரப்படவேண்டும்; இந்தியாவில் ஜனநாயகம் வெற்றிபெற சட்டசபை, மக்கள் சபை உறுப்பினர்கள் வாக்காளர்களின் போதகர்களாக இருக்கவேண்டும்; இப்போது எத்தனை உறுப்பினர்களும், மந்திரிகளும் தங்கள் வாக்காளர்களுக்கு விஷயங்களைக் கற்றுத் தருபவர்களாயிருக்கிறார்கள்—தோழர் காட்கில் புத்தகம் எழுதியுள்ளதைப் போல?

"சிறந்த மக்கள் சபை உறுப்பினர்களுக்குப் பரிசு என்ற ஏற்பாடு, அவர்களுக்கு, தங்கள் பொறுப்பை நினைவுறுத்துவதாகவும், அதை சரிவரச் செய்யத் தூண்டுவதாயுமிருக்கின்றன,"

என்று திரு. பாட்டார், மேலும் குறிப்பிட்டிருக்கிறார்.

# நாணயங்களிலிருந்து

## வெள்ளியைப் பிரித்தெடுக்க

கல்கத்தாவில் தொழிற்சாலை—
4 லட்சம் பவுனில் நிறுவப்படும்

செலாவணியாகாத நாணயங்களிலிருந்து வெள்ளியை தனியாகப் பிரித்தெடுப்பதற்கான தொழிற்சாலை ஒன்று, 3,65,975 பவுன் செலவில் கல்கத்தாவில் விரைவில் அமைக்கப்பட இருக்கிறது.

இந்த நாணயங்களில் 50 சதவிகிதம் சுத்த வெள்ளியாகும். 40 சதவிகிதம் செம்பும், 5 சதவிகிதம் நிக்கலும், 5 சதவிகிதம் துத்தநாகமும் அடங்கியுள்ளன.

இத்தொழிற்சாலைகளுக்கான இயந்திரங்கள் எல்லாம் ஜெர்மனியிலிருந்து வந்து சேர்ந்துவிட்டன என்று செய்திகள் அறிவித்துள்ளன.

## புதுவையில் கைத்தறி தொழில் அபிவிருத்தி

இந்திய சர்க்கார் திட்டம்

கைத்தறித் தொழில் அபிவிருத்திக்காகப் புதுச்சேரியில், ரூ. 1,52,000-மும், காரைக்காலில் ரூ. 14,000-மும் செலவு செய்ய இந்திய சர்க்கார் திட்டமிட்டிருக்கிறார்கள்.

இத்திட்டத்தின்கீழ், இப்பிரதேசங்களில் கைத்தறி நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்கள் அமைக்கப்படும். உடனடியாக, புதுச்சேரியில் சுமார் 1,000 கைத்தறிகளும் காரைக்காலில் சுமார் 100 கைத்தறிகளும், கூட்டுறவுச் சங்கங்களாக அமைக்கப்படும். அளிக்கப்படும் கடன் தொகை, இச்சங்கங்களின் பங்கு மூலதனத்துக்காகவும், அலுவல் நிதிக்காகவும் பயன்படும். இச்சங்கங்களை மேற்பார்வையிட நிபுணர்கள் நியமிக்கப்படுவார்கள்.

# சென்னை தொழில் இலாகாவில் புதிய பதவி

நெய்வேலி வேலைகளுக்காக உண்டாக்கப்பட்டுள்ளது

சென்னை சர்க்கார் தொழில், தொழிலாளர் உறவு இலாகாவில் கூட்டுச் செயலாளர் எனும் ஒரு புதிய பதவியை உருவாக்கி, அந்தப் பொறுப்பை சி. ஜி. ரெட்டியிடம் விடப்படுமென்றும் அறியக் கிடக்கிறது.

தற்போது நெய்வேலி பழுப்பு நிலக்கரி திட்ட இணைப்புக் குழுவில் சென்னை சர்க்கார் பிரதிநிதியாக இருக்கும் டி. எம். எஸ். மணி (ஐ.சி.எஸ்.) அதிகாரி என்பவர்தான், இந்த இலாகாவில் தற்போதைய செயலாளர் ஆவார்.

நெய்வேலி திட்டத்தில் அதிகக் கவனம் செலுத்துவதற்கு இந்த ஒரு ஏற்பாடு சாத்தியமளிக்கக் கூடும் என்று கருதியே, அவருடன் கூட்டுக் காரியதரிசியாக சி. ஜி. ரெட்டி நியமிக்கப்பட்டிருக்கிறாராம். இந்த இலாகா சம்பந்தமான மற்ற வேலைகளை எல்லாம் சி. ஜி. ரெட்டி கவனித்துக் கொள்வார்.

நெய்வேலியிலுள்ள நிலக்கரிப் படிவங்களை உபயோகிப்பது பற்றி பிரிட்டிஷ் எஞ்சினீயர்கள் தந்துள்ள 4 மாற்றுத் திட்டங்களும் கூடிய விரைவில் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படுமாம்.

மேலும், பிரிட்டிஷ் எஞ்சினீயர்களின் மாற்றுத் திட்டங்களைப் பற்றி வேறு நாட்டு எஞ்சினீயர்களுடன் கலந்தாலோசித்துக் கொண்டு, மேற்படி நிலக்கரிப் படிவங்களைப் பயன்படுத்துவது பற்றிய சிறந்த திட்டத்தை இணைப்புக் குழு தீர்மானிக்கும்.

இதுவரையிலும் சர்க்கார், மேற்கண்ட 4 திட்டங்களிலும் எது சிறந்தது என்று கூறவில்லை. இப்படிப்பட்ட விசேட அலுவல்களையெல்லாம், திட்டத்தின் பிரதம நிர்வாகியான டி. எம். எஸ். மணி கவனித்துக் கொள்வாராம்.

நெய்வேலி திட்டம் சம்பந்தமான அலுவல்கள் தவிர, மற்றும் பல்வேறு சிறு தொழில்கள் அமைப்பு சம்பந்தமான திட்டங்களையும் தயாரிக்கும் வேலையில் அவர் ஈடுபடப் போகிறாராம்.

சிறு தொழில்கள் அபிவிருத்திக் குழு மாநிலங்களுக்குப் பணம் ஒதுக்கியுள்ளது. சிறந்த பல திட்டங்கள் தயாரிக்கப்பட இந்தத் தொகை பூராவும் செலவழிக்கப்படவேண்டிய அவசியமேற்படுகிறது.

வேலையில்லாத் திண்டாட்டத்தை நீக்கக் கூடியதாகவும்; பொது மக்கள் தங்கள் அன்றாட வாழ்க்கையில் உபயோகிக்கும் பொருட்களை குறைந்த விலையில் உற்பத்தி செய்வதாகவும் பயன்படுத்தப்படவேண்டும் என்பது தான் இத்திட்டங்களின் முக்கிய நோக்கங்களாகும்.

## கம்பளி பதனிடும் ஆலை

வட ஆற்காடு மாவட்டத்தில் நிறுவப்படும்

கம்பளத் தொழில் அபிவிருத்திக்காக, கம்பளி பதனிடும் ஆலையொன்றை வட ஆற்காடு மாவட்டத்திலுள்ள வின்னகரத்தில் அமைப்பதற்கான திட்டமொன்றை நிறைவேற்ற முற்படுமாறு தொழில் இலாகா டைரக்டரை சர்க்கார் கேட்டுள்ளது. இத்திட்டத்துக்கு ரூ. 11 லட்சத்து 30 ஆயிரம் செலவாகுமென்றும், இதற்கு சென்னை, மைசூர், போன்ற மாநில சர்க்கார்களும், மத்திய சர்க்காரும் பண உதவி செய்யுமென்றும் தெரிகிறது.

# குழந்தை கல்விக்கு தேசீயக் குழு

சாகீர் உசேன் யோசனை

குழந்தைகள் கல்விக்கு என ஒரு தேசீயக் குழு அமைக்கப்பட வேண்டுமென்றும், அக்குழு நர்சரி பள்ளிகளை அமைத்து, அப்பள்ளிகளுக்குத் தேவையான ஆசிரியர் பயிற்சி நிலையங்களை ஏற்படுத்த வேண்டும் என்றும் அலிகார் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் சாகீர் உசேன் இந்தூரில் நடைபெற்ற அகில இந்திய குழந்தைக் கல்வி மாநாட்டில் தலைமை வகித்துப் பேசுகையில் கூறினார்.

குழந்தைகள் கல்வியில் ஐந்து முக்கிய கொள்கைகள் உண்டு என்று உசேன் கூறினார். அவை யாவன:—

(1) தனி நபரின் பெருமையை மதிப்பது;

(2) எந்த வயதில் அபிவிருத்திக்கு தயார் செய்வது என்பதை ஆராய்தல்;

(3) நடவடிக்கைகளின் கொள்கை;

(4) கூட்டுத் தன்மை பற்றிய கொள்கை;

(5) சுதந்திரம் அளிப்பதின் தன்மை.

எந்த கல்வி திட்டத்திலும் தனி நபரின் திறமை பற்றிய கொள்கை அமுல் செய்யப்பட வேண்டுமென்றும், அது நடைமுறையில் இல்லாததால் கல்விக்கான முயற்சிகள் நாசமாகி விட்டன என்றும் அவர் கூறினார்.

கல்வித் திட்டத்தில் குழந்தைகளுக்கு சுதந்திரம் இருப்பது பற்றி அவர் மிகவும் வலியுறுத்தினர். சிலர் குழந்தைகளின் நடவடிக்கைகளில் தலையிடுவது குழந்தையின் வளர்ச்சியைத் தடை செய்கிறது என்றும், அதுபோன்ற பூரண சுதந்திரம் கூடாதென்றும் அவர் கூறினர்.

"வயது வந்தோரிடையே கலவரமும், அதன் மூலமாக நாடுகளிடையே மனக் கசப்பும் ஏற்படுவதைக் காண்கிறோம். இது குடும்பத்திலும், சமூக வாழ்க்கையிலும் தனி சுயநல எண்ணத்தைத் தூண்டிவிடுகிறது. இதன் ஆரம்பம் எங்கிருந்து ஏற்படுகிறது என்றால், குழந்தைகளை தவறான முறையில் வளர்ப்பதால் ஏற்பட்டதாகும்," என்று சாகீர் உசேன் எடுத்துக் காட்டினர்.

"குழந்தைகளின் இயற்கைப் பண்புகளை அறியாததால்தான், அவைகள் தவறான பாதையில் திருப்பிவிடப் படுகின்றன," என்று அவர் மேலும் கூறினர்.

# புதிது அல்ல!

தங்களிடம் ஏராளமாக இருக்கும் வெண்ணெயை நெய்யாக உருக்கி, ஆசிய நாடுகளில் விற்க, அமெரிக்கா, கனடா, ஆஸ்திரேலியா, நியூசிலாந்து, டென்மார்க், ஹாலந்து போன்ற நாடுகள் மிகப் பெரியதோர் திட்டத்தைத் தயாரித்துள்ளனவாம்.

இந்தியா, பாகிஸ்தான், பர்மா, இந்தோனேஷியா, எகிப்து, ஈரான், சிரியா ஆகிய ஆசிய நாடுகள் இத்திட்டத்தில் அக்கறை காட்டி வருவதாகவும் கூறப்பட்டுள்ளது.

ஒரு பவுண்டு நெய்க்கு 25 யு. எஸ். சதம்—அதாவது வீசை நெய் சுமார் ரூ. $3\frac{1}{2}$ என்று விலை நிர்ணயிக்கப்படும் என்று அமெரிக்க அதிகாரிகள் தெரிவித்திருக்கின்றனர். அமெரிக்க சர்க்கார், 64 சதம்வீதம் வெண்ணெயைக் கொள்முதல் செய்திருப்பதால், இத்திட்டத்தின் மூலம் அமெரிக்காவுக்கு ஏராளமான நஷ்டமேற்படும் என்றாலும், இவ்வாறு நெய்யாக விற்காவிட்டால் அமெரிக்கா, இந்த வெண்ணெயை நன்கொடையாக வாவது பிற நாடுகளுக்கு வினியோகிக்க வேண்டியதாகத்தான் இருக்கிறது என்றும் கூறப்படுகிறது.

இந்த நெய் விற்பனை மூலம் கிடைக்கும் பணத்தில் ஒரு பாகம், ஆசிய நாடுகளில் வெண்ணெய் உருக்கும் தொழிற்சாலைகள் அமைக்கப் பயன்படுத்தப்படும் என்றும் அமெரிக்க அதிகாரி ஒருவர் கூறியிருக்கிறாராம்.

# பிடிபட்ட மகனை தண்டனையிலிருந்து தப்புவிக்க கொள்ளைதலைவன் மான்சிங் தந்திரம்

படுகொலைகள் புரிந்து பாமரரை மிரட்டுகிறானும்!

குவாலியர், ஜன. 31—

மான்சிங்கும், அவனது கொள்ளைக் கூட்டத்தாரும் இப்போது படுகொலைகள் புரிய முற்பட்டிருப்பது, மான்சிங்கின் குமாரனான தெசில்தார் சிங் பிடிபட்டதும் அவன்மீது வழக்குத் தொடரப்பட்டு உத்திரப் பிரதேசத்தில் விசாரணை நடைபெறவிருப்பதும் ஆகியவற்றின் எதிரொலிதான் என்று கூறப்படுகிறது.

கடந்த செப்டம்பர் வரையில் மான்சிங்கும் அவனது கொள்ளைக் கூட்டத்தினரும், பெரும் பணக்காரர்களைக் கடத்திச் சென்று அவர்களை விடுவிக்கப் பணம் கேட்டுப் பறித்துக்கொள்வதுடன் நின்றனர். ஆனால், இப்போது படுகொலைகள் புரிவதும், கிராம மக்களைத் துன்புறுத்தி அச்சுறுத்தி வருவதுமான கொடுஞ்செயல்களை புரிந்து வருகின்றனராம். இதற்குக் காரணம், உ. பி. நீதிமன்றத்தில் மான்சிங்கின் புதல்வனான தெசில்தார் சிங் மீதும், பேரனான ஜாங்தெல்சிங் மீதும் உள்ள வழக்குகளில் கிராம மக்கள் எவரும் சென்று தங்களின் துயரங்களையும் அவர்களின் கொடுமைகளையும் கூறாமல் தடுத்து நிறுத்துவதற்காகவே என்று சர்க்கார் வட்டாரங்கள் கருதுகின்றனவாம்.

சில போலீஸ்காரர்களும்கூட அவர்களால் கொல்லப்பட்டனர் அல்லது மிருகத்தனமாகத் தாக்கப்பட்டனர் என்று சர்க்கார் கருதுகிறதாம்.

# கைத்தறி நெசவாளர் குடியிருப்பு காலனிகள்

உதவித் தொகைகள் வழங்க மத்திய சர்க்கார் திட்டம்

கைத்தறித் தொழிலாளர் கூட்டுறவுச் சங்கங்களுக்கான குடியிருப்புக் காலனிகளின் வளர்ச்சிக்கு ஆதரவளித்து வருவதற்காக, அத்தகைய காலனிகளுக்கு உதவித் தொகைகள் வழங்குவதற்கான திட்டமொன்றுக்கு மத்திய வர்த்தக, தொழில் மந்திரி காரியாலயம் அங்கீகாரம் அளித்திருக்கிறது.

குடியிருப்புக் காலனி சாதாரணமாக, நெசவாளர்கள் வசிக்குமிடங்களைப் போன்றவையாகும். அந்த வசிக்குமிடங்களே அவர்களுடைய வேலைக்கூடமாகவும் இருந்துவரும். காலனிகளில், சாயம் தோய்த்தல், கஞ்சிபோடுதல், பார்வையாக்குதல் முதலிய வேலை முறைகளுக்காக எல்லோருக்கும் சொந்தமான இயந்திர உபகரணங்களும் மத்திய நிலையமொன்றில் அமைக்கப்பட்டிருக்கும். அவை யாவும் சம்பந்தப்பட்ட கூட்டுறவுச் சங்கங்களுக்குச் சொந்தமாக இருந்துவருவதுடன் அவைகளினாலேயே நடத்தப்பட்டும் வரும். நெசவாளர்களுக்குத் தேவையான நூல்களை வாங்கி அவர்களுக்கு விநியோகிப்பதற்கும், பூர்த்தியான துணிகளை விற்பனை செய்வதற்கும் கூட்டுறவுச் சங்கங்கள் ஏற்பாடு செய்யும்.

## சமாதானம் பற்றிப் பேசுகையில் சச்சரவு!

டோக்கியோ, ஜன. 31—

'சமாதானமாகக் கொரியாவை ஒன்றுபடுத்துவதெப்படி?'—என்பது பற்றி ஆலோசனை நடத்த இங்குள்ள தென், வடகொரியப் பிரதிநிதிகள் 400 பேர் கூடிப் பேசுகையில் ஏற்பட்ட ஒரு கலவரத்தைப் போக்க 600-க்கு மேற்பட்ட ஜப்பான் ஆயுதந்தரித்தப் போலீசார் தலையீடு தவிர்க்க முடியாததாகி விட்டிருக்கிறது. கலவரத்தையொட்டி யாரும் கைது செய்யப்படவில்லையாம்.

# கல்லூரிக் கல்வியின் தரம்

மத்திய அரசாங்க யோசனை

கர்நூல், ஜன. 31—

கல்லூரிகளில் போதிக்கப்படும் கல்வியின் தரம் உயர்த்தப்பட வேண்டுமென்றும், தகுதி பெறாதவர்களை கல்லூரியில் சேர்க்காமல் கண்டிப்பாக நிராகரித்துவிட வேண்டுமென்றும், இந்திய சர்க்கார், இந்தியாவிலுள்ள எல்லா பல்கலைக் கழகங்களுக்கும் யோசனை தெரிவித்துள்ளதாகத் தெரியவருகிறது.

இந்த யோசனையை அமுல் செய்யும் வகையில், ஐந்தாண்டுத் திட்ட இறுதியில், கல்லூரிகளில் உள்ள இடங்களை மேலும் அதிகரிக்கக் கூடாது என்று சேர்க்கப்படவிருப்பதாக சர்க்கார் தெரிவித்துள்ளதாம்.

கல்லூரிப் படிப்புக்குத் தகுதியுள்ளவர்கள், தங்களது வறுமை காரணமாகத் தடை செய்யப்பட்டு விடாதபடி, கல்லூரிகளில் 'ஸ்காலர்ஷிப்'புகள் அதிகரிக்கப்பட வேண்டுமென்றும் இந்திய சர்க்கார் மேலும் தனது யோசனையைக் கூறியிருக்கிறது.

# சோவியத் ரஷ்யா இராணுவ பலம்

'நேட்டோ' செயலாளர் தரும் விபரம்

சோவியத் ரஷ்யா, கிழக்கு ஜெர்மனி உட்பட கிழக்கு ஐரோப்பாவில் உள்ள அதனுடைய சார்பு நாடுகள் ஆகியவற்றில் 60 லட்சம் இராணுவ வீரர்கள் இருக்கின்றனர் என்று 'நேட்டோ' (வட அட்லாண்டிக் ஒப்பந்த நிறுவனம்) வின் பொதுச் செயலாளரான லார்ட் இஸ்மே தனது அறிக்கை ஒன்றில் குறிப்பிட்டிருக்கிறார்.

உத்தரவு பிறப்பிக்கப்பட்ட 30 நாட்களுக்குள், 400 பிரிவு இராணுவத்தை சோவியத் தயாரிக்க முடியும் என்றும் அவர் அறிக்கை கூறுகிறது.

175 பிரிவு தரைப்படை இராணுவம் சோவியத்திலிருக்கிறது. 1947 முதல் அது அப்படியே இருந்தபோதிலும், அவற்றில் புதிய இயந்திரங்களின் உபயோகம், சண்டையிடும் இயந்திர சக்தி ஆகியவை அதிகரித்துள்ளன.

அதன் சார்பு நாடுகளில் 80 பிரிவு இராணுவம் உள்ளது.

தற்காப்பு, தாக்குதல் ஆகிய இரண்டிற்கும் உபயோகிக்கும் வகையில், சோவியத் ஆகாய விமானப் படை அதிகரித்துள்ளது.

"கடந்த மூன்றாண்டுகளில் சோவியத் விமானங்கள் இரட்டிப்பாக்கப்பட்டுள்ளன; இப்போது சுமார் 20 ஆயிரம் விமானங்கள் உள்ளன; அவற்றில் பாதி 'ஜெட்' ரக விமானங்கள்," என்றும் லார்ட் இஸ்மே அறிக்கை தெரிவிக்கிறது.

# பிழைப்பு பலவிதம்!

தென்னிந்தியாவில் ஊதுவத்தி உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகள் சுமார் 200 உள்ளன. கிராமங்களில் தயாரிக்கப்படுகின்ற காயாத கச்சாப் பத்திகளையெல்லாம் நகரிலுள்ள உற்பத்தியாளர்கள் விலைக்கு வாங்கி, அவர்கள், அவற்றின்மேல் வாசனைப்பொருட்கள் தடவி, உருவாக்கி சரியானபடி சிப்பங்கட்டி, பல்வேறு வர்த்தகப் பெயர்களின் கீழ் அவற்றை விற்பனை செய்துவருகின்றனர் என்று செய்திகள் கூறுகின்றன.

# நான்காண்டுகளுக்குப் பிறகு ஐ. நா.-வுக்கு நல்லறிவு உதயம்

## விவாதத்தில் கலந்து கொள்ள வருமாறு சீனவுக்கு அழைப்பு !

**எந்த நாட்டின் அரசுரிமையை ஒப்புக்கொண்டு தன் அவையில் இடந்தருவதற்கு ஐ. நா. சபை கடந்த நான்கு ஆண்டு காலமாக மறுத்து வருகிறதோ, அந்த நாட்டை, இப்போது விவாதத்தில் கலந்துகொள்ள வருமாறு ஐ. நா. பாதுகாப்புக் குழு அழைக்கிறது.**

ஐ. நா சபையின் பாதுகாப்புக் குழு பார்மோசா பகுதியில் போர் நிறுத்தம் பற்றிய விவாதத்தில் கலந்துகொள்ளுமாறு கம்யூனிஸ்டு சீனவை அழைப்பதென்று முடிவு செய்துள்ளது. இந்த அழைப்புக்கு பீகிங்கிலிருந்து பதில் வரும்வரை பாதுகாப்புக் குழு கூட்டத்தை ஒத்திவைப்பதென்று முடிவு செய்யப்பட்டது.

இத்தீர்மானம் நியூசிலாந்திஞல் முன் மொழியப்பட்டது. சோவியத் யூனியன், இத்தீர்மானத்தின் மீது தனது வாக்கைப் பயன் படுத்தவில்லை. தேசியச் சீன இத்தீர்மானத்தை எதிர்த்தது ; தீர்மானம் 9-1 வாக்குகளால் நிறைவேறியது.

சீனவை கூட்டத்தில் கலந்து கொள்ள அழைப்பது என்று முடிவு செய்யப்பட்டவுடன் நியூசிலாந்து பிரதிநிதியும், பாதுகாப்புக் குழுவின் தலைவருமான வெஸ்லி மன்ரோ, ஐ. நா. சபைச் செயலாளரை, சீனவுக்கு அழைப்பு அனுப்புமாறு கேட்டுக் கொள்வதாகக் கூறினர்.

இதே கூட்டத்தில் சோவியத் யூனியன் மற்றொரு தீர்மானத்தை முன் மொழிந்திருந்தது. "சீனவின் உள்நாட்டு விவகாரங்களில் அமெரிக்கா தலையிடுகிறது," என்றும், "இந்த ஆக்கிரமிப்பை, ஐ. நா. சபை தலையிட்டு தடுக்க வேண்டும்" என்பதும்தான் அத் தீர்மானம்.

நியூசிலாந்தின் தீர்மானத்திற்குப் பின்னர் ரஷ்யாவின் தீர்மானத்தை விவாதத்துக்கு எடுத்துக் கொள்வது என்று பாதுகாப்புக் குழு தீர்மானித்தது.

நியூசிலாந்தின் தீர்மானத்தை அமெரிக்கா ஆதரித்தது.

"தூரக் கிழக்கில், போருக்கான எல்லைக்கோடு ஒன்றை அமெரிக்க ஏகாதிபத்தியம் அமைத்து வருகிறது ; அந்தக் கோட்டிற்குப் பின்னல், அமெரிக்க ஏகாதிபத்திய வாதிகளால், மக்கள் அடிமைப் படுத்தப்படுகிருர்கள்," என்று மாஸ்கோ வானெலி அமெரிக்கா மீது குற்றம் சாட்டியதாம் !

★

### செஞ்சீனவின் நிலை

ஐ. நா. பாதுகாப்புக் குழு எடுத்துக்கொள்ளவிருக்கும் விவாதத்தில் செஞ்சீனவின் பிரதிநிதி கலந்துகொள்ள வேண்டுமானல், பார்மோசா தீவுபற்றிய ரஷ்யா, நியூசிலாந்து நாடுகளின் தீர்மானங்களை ஏககாலத்தில் விவாதத்திற்கு எடுத்துக்கொள்ள வேண்டுமென செஞ்சீன வற்புறுத்துமென்று கூறப்படுகிறது.

★

### சந்திப்பு எப்போது ?

லண்டன், பிப். 1—

"மேற்கு ஜெர்மனியை ஆயுதபாணியாக்குவதான பாரிஸ் உடன்படிக்கை ஊர்ஜிதம் செய்யப்பட்ட பின்னரே, பிரிட்டன், ரஷ்யாவை ஒரு மாநாட்டில் சந்திக்கத் தனது சம்மதத்தைத் தெரிவிக்கும்" என்று பிரிட்டிஷ் பிரதமர் சர்ச்சில், காமன்வெல்த் பிரதமர்கள் மாநாட்டில் கூறியிருக்கிருர். இந்த சந்திப்பு மே மாதத்தில் நடைபெறலாம் என்றும் குறிப்பிட்டிருக்கிருர்.

★

### மற்றொரு ஜினிவா !

லண்டனில் நடைபெறும் காமன்வெல்த் முதல் அமைச்சர்கள் மாநாட்டில் கலந்துகொள்ளும் உறுப்பினர்கள் அதிகாரபூர்வமற்ற முறையில் பார்மோசா பிரச்சினை பற்றி கலந்து பேசுகிருர்கள்.

ஜினிவா மாநாடு போன்ற மற்றொரு மாநாட்டை கூட்டவேண்டுமென்று இவர்கள் ஆலோசனை செய்கிருர்களாம்.

லண்டனில் உள்ள சீனத் தூதுவரை பண்டித நேரு சந்தித்து. பார்மோசா பிரச்சினை பற்றிப் பேசினர் என்று தெரிகிறது.

காமன்வெல்த் மாநாட்டில் பார்மோசா பிரச்சினை வரும்போது. பண்டித நேரு, சீனத் தூதவருடன் தான் நடத்திய பேச்சு வார்த்தைகள் பற்றி எடுத்துச் சொல்வார் என்று தெரிகிறது.

★

### தாக்கிக் கொண்டனர் !

தைப்பே, பிப். 1—

செஞ்சீன, தேசிய சீன (சியாங்) கப்பற் படைகள், டாச்சென் தீவுகளுக்கருகில் இன்று ஒன்றையொன்று தாக்கிக்கொண்டன என்று செய்திகள் அறிவிக்கின்றன.

டாச்சென் தீவுகளுக்கு வடக்கில் 32 கல் தொலைவிலுள்ள, சியாங்குக்குச் சொந்தமான யூஸான் தீவு மீது செஞ்சீனவைச் சேர்ந்த 4 யுத்தக் கப்பல்கள் பீரங்கிப் பிரயோகம் நடத்தியிருக்கின்றனவாம்.

### நேபாளத்தில் நெருக்கடி

அமைச்சரவை விலகவில்லையாம் !

**மன்னரைக் காண்பதற்கு பிரதமர் ஐரோப்பா செல்வார் ?**

"நேபாள மந்திரி சபை இராஜினமா செய்யவில்லை ; எப்போதும் போல் அது வேலை செய்து கொண்டுதான் இருக்கிறது" என்று, நேபாளப் பிரதமர் எம். பி. கொய்ராலா கூறியிருக்கிருர்.

பட்டத்து இளவரசரைத் தாம் சந்திக்கப் போவதாகவும் அவர் திருக்கிருர்.

நேபாள ஆலோசனை அசெம்பிளியின் கூட்டம், இராஜாங்க சபையின் உத்தரவின் பேரில் 1 மாதத்திற்கு ஒத்திவைக்கப்பட்டுள்ள செய்தியை முன்கூட்டியே நேபாள வாமெனலி பரப்பியது பற்றி அவரிடம் கேட்கப்பட்டபோது, சர்க்கார் கட்சித் தலைவர், பட்டத்து இளவரசர் கடிதங்கள் இரகசியமானவை என்றும், வாமெனலி அச்செய்தியை எப்படி அறிவித்தது என்பது தமக்குத் தெரியாது என்றும் கூறினராம்.

தமது கட்சியினரிடையே ஒற்றுமையை ஏற்படுத்தும் நோக்கத்துடன், கட்சியின் செயற்குழுவைக் கலைத்துவிட்டதாகவும் அவர் அறிவித்தார். கட்சியின் இடதுசாரி கோஷ்டியினரும் குழுவில் இடம் பெற்றிருந்தனராம்.

பிரெஞ்சு நாட்டிலுள்ள ரிவீராவில் சிகிச்சை பெற்றுவரும் நேபாள மன்னரின் உடல்நிலை கவலை தருவதாக உள்ளதாம். மன்னரைக் காணவும், நேபாளத்தின் அரசியல் நிலை பற்றி அவருக்கு எடுத்துச் சொல்லவும், பட்டத்து இளவரசரோ, அல்லது அவருடைய இரு சகோதரர்களில் யாராவது ஒருவரோ செல்லுவாராம்.

மன்னரைச் சந்திக்க, பிரதமர் கொய்ராலாவே ஐரோப்பாவுக்குச் செல்லக் கூடுமென்றும் தெரிகிறது.



## அதிகாரத்தை சொந்த........

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

விரும்புகிருர்கள் என்பதைத்தான் தெள்ளத் தெளிய எடுத்துக் காட்டுகிறது. இந்த முடிவைக் கொண்டுள்ள அவர்கள், சபையில் உள்ள வேறு கட்சியினரை எப்படியாவது திருப்திப்படுத்த முயல்கின்றனர்.

"கடந்த ஜன 27-ந் தேதி பன்றுவயலார்-புனப்புராகைதிகளை விடுதலை செய்ததை இதற்கு உதாரணமாக்கலாம். அந்தக் கைதிகள் விடுதலை செய்யப்பட்டதற்கு, சர்க்கார் வேறு ஏதாவது காரணம் கூறலாம் ; ஆனல் அவர்கள் விடுதலை செய்யப்பட்டிருப்பது 5-வது குடியரசு தினத்தன்று ஆகும்.

"கைதிகள் விடுதலை செய்யப்படுவதை நான் எதிர்க்கவில்லை ; ஆனல், உண்மையில் அவர்கள் விடுதலை செய்யப்பட வேண்டுமென்பதில் நல்லெண்ணமுடையவராக முதன் மந்திரி இருந்திருந்தால், அந்தக் கைதிகளை, தான் பதவி ஏற்ற தினத்தன்றே விடுதலை செய்திருக்கலாம்.

"ஆனல், இந்த முதன் மந்திரி கடந்த காலத்தில், தனது சர்க்கார் இந்தக் கைதிகளை விடுதலை செய்யாது என்றும், இந்தக் கைதிகள் கொலை, கொள்ளை போன்ற அட்டூழியங்களைச் செய்தவர்கள் என்றும் கூறிவந்திருக்கிருர். இப்போது இந்த குறிப்பிட்ட சூழ்நிலையில் அவர்களை ஏன் விடுதலை செய்தார்? அநேகமாக அவர் தாம் தொடர்ந்து பதவியில் இருக்க கம்யூனிஸ்டுகளின் ஆதரவைப் பெறுவதற்காகவே விடுதலை செய்திருக்கிருர் என்றுதான் கொள்ளவேண்டியிருக்கிறது.

"கம்யூனிஸ்டுகளின் இதர கோரிக்கைகளையும், ஒன்றன்பின் ஒன்ருக அவர் நிறைவேற்றுவார் என்று நம்புகிறேன். இதனல், பட்டம் தாணுபிள்ளை பெரும்பான்மையினரின் ஆதரவற்ற தனது மந்திரி சபையின் ஆயுளை நீடிக்கப் பார்க்கிருர்."

மேலும், இப்போதுள்ள மந்திரி சபை உறுதியான நல்லதொரு நிர்வாகத்தைத் தரமுடியாது என்பதில் தனக்குச் சந்தேகமில்லை என்றும் பனம்பள்ளி கோவிந்தமேனன் குறிப்பிட்டிருக்கிருர்.

மாநிலத்தின் பொருளாதாரத்தைச் சீர்குலைக்கும் வகையில் ஏராளமான உத்தியோகங்களை கொழுத்த சம்பளத்துடன் உருவாக்குவதில் சர்க்கார் ஆர்வமுடையதாயிருப்பதையும் அவர் கூறியிருக்கிருர்.

"ம. சோ. கட்சி மந்திரி சபை ஜனநாயகம் என்ற பெயரால் ஆபாசமான, தரக்குறைவான காரியங்களில் ஈடுபட்டுள்ளது," என்றும் பனம்பள்ளி குற்றம் சுமத்தியிருக்கிருர்.

★

### அரசியல் பேரமல்லவாம் !

"இப்போது காங்கிரஸ் கட்சியின் ஆதரவின்றி ம. சோ. கட்சி மந்திரி சபை இயங்குகிறது ; அதனல் இப்போது இடதுசாரிக் கட்சிகளின் லட்சியங்களுக்கு உருக்கொடுக்க அவர்களால் முடியும் ; எங்களுடைய கோரிக்கைகளை, எவ்வித அரசியல் பேரம் என்றும் கருதக் கூடாது,"

இவ்வாறு, புரட்சிகர சோஷலிஸ்டுத் தலைவர் டி. கே. திவாகரன், பட்டம் தாணு மந்திரி சபையை ஆதரித்துப் பேசுகையில் குறிப்பிட்டிருக்கிருர்.

★

### திரு - தமிழர் துயரம்

**ராஜப் பிரமுகரின் உரையில் இடம் பெருதது ஏன் ?**

"திரு - தமிழக மக்களின் நியாயமான உரிமையான, மொழிவழி மாநில அமைப்பு குறித்து, ராஜப் பிரமுகரின் உரையில் ஏதும் இல்லாதது வருந்தத் தக்கது."

"ம. சோ. கட்சி அரசாங்கத்திற்குக் கம்யூனிஸ்டுகள், நிபந்தனையற்ற ஆதரவு தருவது என்பதோ, பொதுவான ஒத்துழைப்பு உண்டு என்பதோ போன்ற கேள்வியே எழவில்லை; ஆனல், இந்த மந்திரி சபை வீழ்ந்து விடுவதினல் ஏற்படும் பலா பலன்களை எண்ணிப் பார்க்கவேண்டிய பொறுப்பும் அவர்களுக்கு இருக்கிறது,"

என்று, இடதுசாரி ஐக்கிய முன்னணித் தலைவர் டி. வி. தாமஸ் பேசுகையில் குறிப்பிட்டிருக்கிருர்.

★

### அப்போது அவர்கள் ! இப்போது நாங்கள் !

"காங்கிரஸ் கட்சியுடன் திரு—தமிழ் நாடு காங்கிரசார் இப்போது சேர்ந்திருப்பது கண்டிக்கத்தக்கது ; தென் திருவாங்கூரில், போலீஸ் துப்பாக்கிப் பிரயோகம் நடைபெற்றபோது, காங்கிரஸ் கட்சி, சட்டசபையில் ம. சோ. கட்சி மந்திரி சபையை ஆதரித்திருக்கிறது ; மேலும், துப்பாக்கிப் பிரயோகத்தை எதிர்த்து, காங்கிரஸ், இதுவரை குரல் எழுப்பவில்லை,"

என்று கம்யூனிஸ்டு தலைவர் டி. வி தாமஸ் பேசியிருக்கிருர்.

★

காங்கிரஸ் ஆதரவு தராததால்

### பதவியைத் துறக்க வேண்டுமா ?"

**பட்டத்தின் சப்பைக்கட்டு**

"காங்கிரஸ் தனது ஆதரவை நிறுத்திவிட்டதிஞலேயே ம. சோ கட்சி மந்திரி சபை ராஜினமா செய்ய வேண்டுமென்பதல்ல ; அப்படிச் செய்வது, அரசியல் சட்ட நடைமுறைக்கு விரோதமானதாகும் ; சட்டசபையினர்தான், நாங்கள் தொடர்ந்து பதவியிலிருக்க வேண்டுமா, கூடாதா என்பதைப் பற்றிக் கூற வேண்டும்,"

என்று, முதன் மந்திரி பட்டம் தாணு பிள்ளை, திரு—கொச்சி சட்டசபையில் ராஜப்பிரமுகரின் உரைக்கு நன்றி தெரிவிக்கும் தீர்மானத்தின் மீது நடைபெற்ற விவாதத்திற்குப் பதிலளிக்கையில் குறிப்பிட்டிருக்கிருர்.

கடந்த சில நாட்களாக தனது மந்திரி சபைக்கு ஆதரவு இருக்கிறதென்பதற்கு—தனது சர்க்கார் தொடர்ந்து பதவியிலிருப்பது மாநிலத்திற்கு நல்லது என்று அவர்கள் கருதுகிருர்கள் ; இல்லாவிட்டால் ஆதரிக்கமாட்டார்கள் என்ற உண்மைதான் அடிப்படை—என்று தான் கருதுவதாயும் அவர் கூறியிருக்கிருர்.

★

### குறை கூறக் கூடாதாம் !

"திரு-தமிழ்ப் பகுதியில் நடைபெற்ற சம்பவங்களுக்கு தன்னையோ, தன் அரசாங்கத்தையோ குறை கூறுவது பொருத்தமற்றதாகும்," என்றும் அவர் கூறியிருக்கிருர்.

★

### அர்த்தமற்றதாம் !

"மாநில புனரமைப்புக் குழு இயங்கிக் கொண்டிருக்கும் போது தமிழர்கள் கிளர்ச்சியில் இறங்கியது அர்த்தமற்றதாகும்."

"நான், மக்கள் எல்லோரும் சுமுகமாக—ஒற்றுமையுடன் வாழ வேண்டும் என்று விரும்புகிறேன் ; மக்களில் எந்த ஒரு பிரிவினரும், அரசாங்கத்திற்கு எதிராக இருப்பதை நான் விரும்பவில்லை," என்றுகூட பட்டம் தாணு பேசியிருக்கிருர்.

## ஏஜண்டுகள் தேவை

கீழ்க்கண்ட ஊர்களில் 'நம் நாடு' இதழை விற்பனை செய்ய முன் பணம் கட்டக்கூடிய பொறுப்பு வாய்ந்த ஏஜண்டுகள் தேவை.

தஞ்சாவூர்
நாகப்பட்டினம்
செங்கற்பட்டு
கடலூர் N. T.
பொன்னேரி

நிர்வாகி, 'நம் நாடு'

## கழகக் கூட்டம்

★

**சென்னை**

30-வது வட்ட தி. மு. கழக இரண்டாம் ஆண்டு விழா
சிந்தாதிரிப்பேட்டை, உலகப்ப மேஸ்திரி தெருவில்
3—2—55 மாலை 6 மணிக்கு
தலைவர் : மணிவண்ணன்
பேசுவோர் :
சி. பி. சிற்றரசு
கண்ணதாசன்
எம். கே. கண்ணன்

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம். ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று (24, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: சி. என். அண்ணதுரை, எம். ஏ.,

